பக்கம் 3



வாழ்வாதாரத் தகவல்கள்

பக்கம் 4



மண்ணை இழந்த மக்களின் பாடுகள்

பக்கம் 5

யாழில் நிலைமைகள் முன்னேற்றம்



# மீண்டும் வாழ்வோம்

මීන්ඩුම් වාල්වෝම්

பக்கங்கள் Pages 8 | Vol 2 | No 39

இலவச பிரதி Free Copy

Lifeline ▪ Humanitarian Information For IDPs

15.11. 2009

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான தகவல் பரிமாற்றம்




■ FSD நிறுவனத்தின் மூலமாக வடக்கு மற்றும் கிழக்குப் பகுதிகளில் இடம்பெற்றுவரும் கண்ணிவெடி அகற்றல் நடவடிக்கைகள்.

## குறித்த திகதியில் க.பொ.த சா/த பரீட்சைகள் ஆரம்பமாகும்

### » கல்வி அமைச்சர்

*எஸ். ரமணன்*

கல்விப் பொதுத்தராதர சாதாரண தரப் பரீட்சை உரிய திகதியில் ஆரம்பமாகும் என்றும் எக்காரணங்கொண்டும் ஒத்திவைக்கப்பட மாட்டாது எனவும் கல்வி அமைச்சர் அறிவித்துள்ளார்.

வன்னியில் இருந்து இடம்பெயர்ந்த மாணவர்களின் நலன் கருதி வன்னி மாணவர்களுக்கு அடுத்த வருடம் பெப்ரவரி மாதம் சாதாரணத்தரப் பரீட்சையை நடத்துமாறு யாழ். மாவட்ட அரசசார்பற்ற நிறுவனங்களின் இணையம் கோரிக்கை விடுத்திருந்தது.

எனினும் பரீட்சையினை ஒத்திவைக்க முடியாது என்றும் திட்டமிட்டவாறு இலங்கையின் அனைத்து பகுதிகளிலும் எதிர்வரும் டிசம்பர் மாதம் சாதாரணதரப் பரீட்சைகள் நடத்தப்படும் என்றும் கல்வி அமைச்சர் சுசில் பிரேமஜயந்த் தெரிவித்துள்ளார்.

இக்கட்டான சூழ்நிலை நிலவிய காலங்களிலும் கல்விப் பொதுத்தராதர உயர்தரப் பரீட்சை மற்றும் ஐந்தாம் ஆண்டு புலமைப் பரிசில் பரீட்சை ஆகியன திட்டமிட்டவாறு நடத்தப்பட்டதைச் சுட்டிக்காட்டிய அமைச்சர், அதே போன்று சாதாரணதரப் பரீட்சையும் குறித்த நாளில் ஆரம்பமாகும் எனத் தெரிவித்தார்.

மாணவர்கள் இவ்வாறான கோரிக்கைகளால் குழப்பமடையாமல் பரீட்சைக்கு தங்களைத் தயார்படுத்தவேண்டும் என்றும் அமைச்சர் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

## A9 வீதியினூடாக இருவழி இ.போ.ச. பஸ் சேவை ஆரம்பம்

*நிரஞ்சனி ரோலண்ட்*

தெற்கிலிருப்போர் வடக்குக்கும் வடக்கிலிருப்போர் தெற்கிற்கும் சுதந்திரமாகவும் இலகுவாகவும் ஏ-9 வீதியினூடாக சென்று வரும் வகையில் இருவழிப்பாதை பஸ் சேவைகளைக் கடந்த புதன் கிழமை இலங்கை போக்குவரத்துச் சபை ஆரம்பித்துள்ளது.

பயணிகளின் வசதி கருதி யாழ்ப்பாணத்திற்கும் கொழும்பிற்கும் இடையில் நாளாந்தம் இரண்டு அரை சொகுசு பஸ்களும் ஒரு சாதாரண பஸ்ஸும் சேவையில் ஈடுபடுத்தப்பட்டுள்ளன.

இதற்கமைய அரை சொகுசு பஸ் சேவைக் கட்டணமாக 550 ரூபாவும் சாதாரண பஸ் சேவைக் கட்டணமாக 386 ரூபாவும் அறவிடப்படுகின்றது.

கடந்த புதன்கிழமை காலை 9.20க்கு யாழ்ப்பாணம் பஸ் நிலையத்திலிருந்து கொழும்பு வரையான பஸ் சேவைகள் ஆரம்பமாகின. அன்று காலை 8.00 மணிக்கு முதலாவது அரைசொகுசு பஸ் யாழ்ப்பாணத்திலிருந்து சேவையை ஆரம்பித்து இரவு 7.30க்கு கொழும்பை வந்தடைந்தது. அதேபோல் அன்று காலை 9 மணிக்கு யாழ்ப்பாணத்திலிருந்து பயணத்தை ஆரம்பித்த சாதாரண கட்டண பஸ் இரவு 8.30மணிக்கு கொழும்பை வந்தடைந்தது. இதேவேளை, அன்று காலை 9.00 மணிக்கு யாழ்ப்பாணத்திலிருந்து பயணத்தை ஆரம்பித்த இரண்டாவது அரை சொகுசு பஸ் இரவு 9.30க்கு கொழும்பை வந்தடைந்தது.

இதேபோல் கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்துக்கான முதலாவது அரை சொகுசு பஸ் சேவையானது கடந்த வியாழக்கிழமை இரவு 11.30 மணிக்கு கொட்டாஞ்சேனை சென். லூசியஸ் தேவாலயத்துக்கருகில் பயணத்தை ஆரம்பித்து இரவு 11.45க்கு புறக்கோட்டை பஸ் நிலையத்தை வந்தடைந்தது. பின்னர், அங்கிருந்து பயணிகளை ஏற்றிக்கொண்டு அதிகாலை 12.30 மணிக்கு யாழ்ப்பாணம் நோக்கிப் பயணத்தை ஆரம்பித்தது.



**தேசிய அடையாள அட்டை அல்லது கடவுச்சீட்டு வைத்திருக்கும் எந்தவொரு நபரும் யாழ்ப்பாணத்திலிருந்து கொழும்புக்கும் கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்துக்கும் இந்த பஸ்ஸில் பயணிக்கலாம். ஆனால், வழமையைப் போன்று பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்**

● ***இராணுவப் பேச்சாளர் பிரிகேடியர் உதய நாணயக்கார***

அதேபோல், இரண்டாவது அரை சொகுசு பஸ் வெள்ளவத்தையிலிருந்து ஆரம்பித்து அன்று அதிகாலை 12.30 மணிக்கு புறக்கோட்டையை வந்தடைந்து. அங்கு அரை மணிநேரம் தரித்துவைக்கப்பட்டு 1 மணிக்கு யாழ்ப்பாணம் நோக்கி பயணத்தை ஆரம்பித்தது. இதேவேளை, சாதாரணக் கட்டண சேவைக்கான பஸ் அன்று அதிகாலை 1.30 மணிக்கு புறக்கோட்டை மத்திய பஸ் நிலையத்திலிருந்து யாழ். நோக்கி அதன் சேவையை ஆரம்பித்தது. இம்முறை ஆரம்பிக்கப்பட்டுள்ள இச்சேவையானது தொடர்ந்து அமுலில் இருக்கும் என தெரிவிக்கப்படுகின்றது.

கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்துக்கு இந்த பஸ்களில் பயணிப்பதற்கு ஆசனங்களை முன்கூட்டியே பதிவு செய்ய வேண்டும் என்றும் காலை 7.00 மணி முதல் பதிவுகளை மேற்கொள்ளலாம் எனவும் புறக்கோட்டை மத்திய பஸ் நிலைய ஊழியரான ஸ்ரீஜேசிறிகுமார தெரிவித்தார். அதற்காக 50 ரூபா பதிவுக் கட்டணமாக அறவிடப்படும் எனவும் அவர் குறிப்பிட்டார்.

ஏ-9 வீதியினூடாக இந்த பஸ்களில் பயணிப்பதற்கு விசேட ஆவணங்கள் தேவையில்லையென இராணுவப் பேச்சாளர் பிரிகேடியர் உதய நாணயக்கார தெரிவித்தார். இது தொடர்பாக அவர் மேலும் தெரிவித்ததாவது, 'தேசிய அடையாள அட்டை அல்லது கடவுச்சீட்டு வைத்திருக்கும் எந்தவொரு நபரும் யாழ்ப்பாணத்திலிருந்து கொழும்புக்கும் கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்துக்கும் இந்த பஸ்ஸில் பயணிக்கலாம். ஆனால், வழமையைப்போன்று பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்' என்றார்.

கடந்த புதன்கிழமை ஏ-9 வீதியினூடாக ஆரம்பிக்கப்பட்ட இந்த பஸ்சேவைகள் தொடர்பாக இலங்கை போக்குவரத்து அமைச்சின் ஊடகப்பேச்சாளர் சுமத் வீரசிங்க தெரிவித்ததாவது, 'யாழ். குடாநாட்டில் வாழும் தமிழ் மக்களுக்கு இது ஒரு வரப்பிரசாதமாக அமைகின்றது. ஏனெனில் திருகோணமலையிலிருந்து காங்கேசன்துறைமுகம்வரை கப்பலில் செல்வதற்கு சுமார் ஐயாயிரம் ரூபா செலவாகின்றது. இரத்மலானையிலிருந்து விமானத்தின் மூலம் பலாலி வரை செல்வதற்கு இருபதாயிரம் ரூபா செலவாகின்றது. ஏ-9 வீதியினூடாக பஸ்ஸில் பயணிப்பதன் மூலம் செலவுகளை குறைத்துக்கொள்ளலாம். இதேவேளை, கொழும்பு -யாழ்ப்பாணம் மாத்திரமல்ல யாழ்ப்பாணத்திலிருந்து திருகோணமலை, மட்டக்களப்பு, கண்டி, வவுனியா ஆகிய பகுதிகளுக்கும் பஸ்களை சேவையில் ஈடுபடுத்த எதிர்பார்க்கின்றோம்' என்றார்.

# இடம்பெயர்ந்தவர்கள், மீள்குடியமர்த்தப்பட்டவர்கள் விபரங்கள்

01 ஏப்ரல் 2009 இலிருந்து இடம்பெயர்ந்து முகாம்களில் தங்கியிருந்த மக்கள் விபரங்கள்




**யாழ். முகாம்களுக்கு இடம்பெயர்ந்து வந்தவர்கள்** (நவம்பர் 01 வரை)

| யாழ்ப்பாணம் | குடும்பம் | த.நபர் |
|---|---|---|
| கோப்பாய் ஆ.பயிற்சிக் கல்லூரி | 22 | 71 |
| பழைய கோர்ட் ஹவுஸ் | 75 | 160 |
| கொடிகாமம் வித்தியாலயம் | 74 | 254 |
| கைதடி பல்கலைக்கழக விடுதி | 106 | 260 |
| பனை ஆராய்ச்சிக் கல்லூரி | 95 | 418 |
| கொடிகாமம் ரமாவில் | 407 | 1,274 |
| மிருசுவில் | 106 | 379 |
| மொத்தம் | **888** | **2,816** |

**திருகோணமலைக்கு இடம்பெயர்ந்து வந்தவர்கள்** (ஒக்டோபர் 22 வரை)

| திருகோணமலை | குடும்பம் | த.நபர் |
|---|---|---|
| சஹனகம நலன்புரி நிலையம்1 | 1,303 | 4,260 |
| சஹனகம நலன்புரி நிலையம்2 | 706 | 2,043 |
| வேறு இடைத்தங்கல் முகாம்கள் | 219 | 663 |
| மொத்தம் | **2,228** | **6,966** |

**வவுனியா முகாம்களுக்கு இடம்பெயர்ந்து வந்தவர்கள்** (ஒக்டோபர் 28 வரை)

| வவுனியா | குடும்பம் | த.நபர் |
|---|---|---|
| கல்வியியற் கல்லூரி | 900 | 2,923 |
| புதுக்குளம் ம.வித்தியாலயம். | 402 | 1,474 |
| தாண்டிக்குளம் பாடசாலை | 171 | 506 |
| கோமரசங்குளம் பாடசாலை | 559 | 1,922 |
| வீரபுரம் | 1,085 | 3,572 |
| சுமதிபுரம் | 1,210 | 3,767 |
| தர்மபுரம் | 1,275 | 4,258 |
| மெனிக்ஃபாம் | 3,845 | 13,322 |
| மெனிக்ஃபாம்-வலயம் 1 | 12,758 | 38,802 |
| மெனிக்ஃபாம்-வலயம் 2 | 12,054 | 39,559 |
| மெனிக்ஃபாம்-வலயம் 3 | 9,087 | 27,751 |
| மெனிக்ஃபாம்-வலயம் 4 | 8,064 | 22,015 |
| மெனிக்ஃபாம்-வலயம் 5 | 1,820 | 6,288 |
| மெனிக்ஃபாம்-வலயம் 7 | 1,025 | 3,307 |
| மெனிக்ஃபாம்-வலயம் 6A | 1,542 | 5,340 |
| மெனிக்ஃபாம்-வலயம் 6B | 514 | 1,702 |
| மொத்தம் | **56,311** | **176,508** |

**மன்னார் முகாம்களுக்கு வந்தவர்கள்**

| மன்னார் | குடும்பம் | த.நபர் |
|---|---|---|
| இலுப்பைக்குளம் | 187 | 601 |
| களிமோட்டை | 176 | 503 |
| சிறுகண்டல்1 | 168 | 525 |
| சிறுகண்டல்2 | 107 | 360 |
| மொத்தம் | **638** | **1,989** |

5 நவம்பர் 2009 வரை **24,974** பேர் தற்காலிக முகாம்களிலிருந்து விடுவிக்கப்பட்டு அவர்களது உறவினர்களிடமும் வயோதிபர் மடங்களிலும் சேர்க்கப்பட்டுள்ளனர். இவர்களில் பெரும்பாலானோர் வயோதிபர்கள்.

5 நவம்பர் 2009 வரை **102,728** பேர் அவர்களது சொந்த இடங்களான யாழ்ப்பாணம், வவுனியா, மன்னார், திருகோணமலை, மட்டக்களப்பு, முல்லைத் தீவு, கிளிநொச்சி, அம்பாறை, கண்டி மற்றும் பொலனறுவை மாவட்டங்களுக்கு விடுவிக்கப்பட்டு அனுப்பி வைக்கப்பட்டுள்ளனர்.

தகவல்: UNHCR வவுனியா




தொகுப்பு : நிரஞ்சனி ரோலண்ட்

## நைரோபி



நைரோபியின் மொகாடிஷு பகுதியில் இடம்பெயர்ந்துள்ள மக்களுக்கு சுகாதார சேவைகள் முறையாக சென்றடைவதில்லையென அம்மக்கள் விசனம் தெரிவித்துள்ளனர். மனிதாபிமானப் பணிகள் குறைந்தளவில் கிடைக்கப்பெறுவதாகவும் மலசலகூட வசதிகள் போதியதாக இன்மையாலும் தாம் பெரும் அசௌகரியங்களை எதிர்கொண்டுள்ளதாக இடம்பெயர்ந்த மக்கள் கூறியுள்ளனர்.

30 முகாம்களில் வாழ்ந்து வரும் 550 குடும்பங்களைச் சேர்ந்த சுமார் 3300 பேருக்கு மருத்துவ சேவைகளை வழங்குவதற்கு இரண்டு சிகிச்சை நிலையங்கள் மாத்திரமே உள்ளதாக அமெரிக்காவைத் தளமாகக்கொண்டு இயங்கும் நிவாரண அமைப்பைச் சேர்ந்த மருத்துவர் ஹுசைன் அலி மொஹமட் தெரிவித்துள்ளார். இதேவேளை முகாம்களிலுள்ள அகதிகளில் பலர் போஷாக்கு குறைபாட்டினால் பாதிக்கப்பட்டுள்ளதாகவும் நோய்த்தொற்றுக்குள்ளாகியுள்ளதாகவும் அவர் மேலும் தெரிவித்துள்ளார்.

## ஆப்கானிஸ்தான்



ஆப்கானிஸ்தானில் தொண்டுப் பணிகளில் ஈடுபட்டிருந்த நூற்றுக்கதிகமான ஐ.நா தொண்டுப் பணியாளர்கள் பாதுகாப்புக் காரணங்களுக்காக ஆப்கானிஸ்தானிலிருந்து தற்காலிகமாக வெளியேறியுள்ளனர். இவர்களின் வெளியேற்றத்தையடுத்து அங்கு தொண்டுப் பணிகளில் ஈடுபடும் உள்நாட்டு மற்றும் சர்வதேசத் தொண்டு நிறுவனங்கள் பல பாதுகாப்பை உறுதிப்படுத்துவது தொடர்பில் அதிக அக்கறைகொண்டுள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது. ஆயுதக் குழுக்களால் தொண்டுப் பணியாளர்கள் இலக்கு வைக்கப்படுவதாக ஆப்கானிஸ்தானுக்கான புனர்நிர்மாண மற்றும் அவசர மாற்றங்களுக்கான அமைப்பின் தலைவர் கயல் ஷா தெரிவித்துள்ளார்.

## யேமன்

யேமன் அரசுக்கும் ஹொதி லெட் ஷியா எனப்படும் தீவிரவாத கும்பலுக்குமிடையே கடந்த ஐந்து வருடங்களாக இடம்பெற்ற மோதலின் காரணமாக சுமார் ஒரு இலட்சம் பேர் இடம்பெயர்ந்துள்ளதாகத் தெரிவிக்கப்படுகின்றது. இவ்வாறு இடம்பெயர்ந்து சதா அம்ரன் ஹைஜா மற்றும் அல் ஜாப் ஆகிய பகுதிகளில் தங்கியுள்ள மக்களுக்கு உலக உணவுத் திட்டம் மனிதாபிமானப் பணிகளை முன்னெடுத்து வருவதாகத் தெரிவிக்கப்படுகின்றது.

இடம்பெயர்ந்து முகாம்களில் தங்கியுள்ள சுமார் 98,126 மக்களில் 13,447 பேருக்கு உலக உணவுத் திட்டம் உணவுகளை வழங்கி வருவதுடன் அரசசார்பற்ற நிறுவனங்களும் உள்ளூர் அமைப்புகளும் ஐ.நா.வின் அகதிகளுக்கான அமைப்பும் இதற்கான உதவிகளை மேற்கொண்டு வருவதாகத் தெரிவிக்கப்படுகின்றது.

## பாகிஸ்தான்



பாகிஸ்தானின் வரிஸ்டான் பகுதியில் இடம்பெயர்ந்துள்ள மக்களினதும் அவர்களுக்கு மனிதாபிமானப் பணிகளை வழங்கிவரும் தொண்டு நிறுவனங்களினதும் பாதுகாப்பை உறுதிப்படுத்துமாறு ஐ.நா தெரிவித்துள்ளது. யுத்தத்தினால் பாதிக்கப்பட்டுள்ள மக்களுக்கான மனிதாபிமானப் பணிகளை வழங்குவோரின் பாதுகாப்பு கேள்விக்குறியாகியுள்ளதாகவும் இடம்பெயர்ந்தவர்கள் தங்கியுள்ள பகுதிகளுக்கு அவர்களைச் செல்ல அனுமதிப்பது பயங்கரமான விடயமாக இருப்பதாகவும் பாகிஸ்தானின் மனிதாபிமானப் பணிகளுக்கான ஒருங்கிணைப்பாளர் மார்ட்டின் மொக்வன்ஜா தெரிவித்துள்ளார்.





மீண்டும் வாழ்வோம் (Lifeline) செயற்றிட்டமானது USAID இனால் நிதியளிக்கப்பட்டு Internews Network இனால் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.





படப்பிடிப்பு :எஸ்.ஆர்.லெம்பர்ட்

■ வவுனியா, செட்டிக்குளம் நலன்புரி நிலையங்களில் இருந்து மன்னார் பிரதேச செயலாளர் பிரிவுக்குட்பட்ட பகுதிகளைச் சேர்ந்த 696 குடும்பங்களைச் சேர்ந்த 1899 பேர் இதுவரை அவர்களுடைய சொந்த இடங்களுக்கு அழைத்து வரப்பட்டுள்ளதாக மன்னார் பிரதேசச் செயலாளர் திருமதி சிரான்லி டிமேல் கடந்த வாரம் தெரிவித்துள்ளார்.

இது தொடர்பாக அவர் மேலும் தெரிவிக்கையில், வவுனியா மற்றும் செட்டிக்குளம் நலன்புரி நிலையங்களில் இருந்து மன்னார் மாவட்டத்தைச் சேர்ந்த மக்கள் மன்னார் நானாட்டானில் உள்ள இலுப்பைக்குளம் நலன்புரி நிலையத்திற்கு அழைத்துவரப்பட்டனர். உரிய விசாரணைகளின் பின் மன்னார் மற்றும் நானாட்டான் பிரதேச பிரிவுகளுக்குட்பட்ட அந்தந்த இடங்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டு வருகின்றனர் என்றார்.

# இடம் பெயர்ந்தோரை எதிர்க்கட்சியினர் சந்திப்பர்

*ஏ.சொர்ணலிங்கம்*

வன்னியிலிருந்து இடம்பெயர்ந்து நிவாரணக் கிராமங்களில் தங்கவைக்கப்பட்டிருக்கும் மக்களை எதிர்க்கட்சியினர் சந்திப்பதற்கான அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

இது தொடர்பாக தமிழ்த்தேசிய கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினர் பத்மினி சிதம்பரநாதன் தெரிவிக்கையில், எதிர்வரும் 16ஆம் திகதி நிவாரணக்கிராமங்களுக்குச் செல்வதற்காக அவர்களின் விபரங்களை அரசாங்கத்திடம் கொடுத்துள்ளதாகத் தெரிவித்தார். ‘‘இது எப்போதோ நடந்திருக்க வேண்டிய விடயம். அந்த மக்களை சென்று பார்க்க ஆவலாக இருக்கின்றோம்,’’ என அவர் மேலும் தெரிவித்தார்.

இது தொடர்பாக மீள்குடியேற்ற மற்றும் அனர்த்த நிவாரண சேவைகள் அமைச்சர். ரிஷாத் பதியுதீன் கூறுகையில், மீள்குடியேற்றத்திற்காக அமைக்கப்பட்ட 32 பாராளுமன்ற உறுப்பினர் கொண்ட குழுவின் சிபாரிசின் அடிப்படையிலேயே இவர்கள் இடம்பெயர்ந்த மக்களை பார்ப்பதற்கு அழைத்துச் செல்லப்படுவதாகத் தெரிவித்தார்.

# புலம்பெயர்ந்தோர் அனுப்பிய பொருட்கள் நிவாரணக்கிராமங்களில் விநியோகிக்கப்பட்டன

*சு. சத்தியா*

வன்னியிலிருந்து இடம்பெயர்ந்த மக்களுக்காக ஐரோப்பிய நாடுகளில் வாழும் தமிழ் மக்களால் அனுப்பிவைத்திருந்த உதவிப் பொருட்கள் கடந்த செவ்வாயன்று (10) விநியோகிக்கப்பட்டன.

இலங்கை செஞ்சிலுவைச் சங்கத்தின் ஊடாக இரண்டு லொறிகள் மூலமாக எடுத்துச்செல்லப்பட்டு செஞ்சிலுவைச் சங்கத்தின் உத்தியோகத்தர்கள் மூலமாக மெனிக் ஃபாம் நிவாரணக்கிராமங்களில் வாழும் சுமார் 252 குடும்பங்களுக்கு இந்த நிவாரணப் பொருட்கள் பகிர்ந்தளிக்கப்பட்டன.

இது தொடர்பாக விளக்கமளித்த செஞ்சிலுவைச் சங்கத்தின் பரப்புரை இணைப்பாளர் ருக்ஷான் ஒஸ்வல்ட், நபர் ஒருவருக்கு வழங்கப்பட்ட உணவுப் பொதியில் அரிசி, சோயா, சீனி, கோதுமை மா, பிஸ்கட், தகரத்தில் அடைக்கப்பட்ட மீன், தேயிலை, நூடில்ஸ், சொக்லேட், பருப்பு போன்றன உள்ளடக்கப்பட்டிருந்ததாகவும் மீதமுள்ள பொருட்கள் களஞ்சியப்படுத்தப்பட்டு மக்களின் தேவைக்கேற்ப வழங்கப்படவுள்ளதாகவும் தெரிவித்தார்.

கப்பல் மூலமாகக் கொண்டுவரப்பட்ட பொருட்கள் தரநிர்ணயத்திற்கு உட்படுத்தப்பட்ட பின்னரே இடம்பெயர்ந்த மக்களுக்கு விநியோகிக்கப்பட்டுள்ளது. சில பொருட்கள் காலாவதியான நிலையிலும், ஏற்றி இறக்கும்போது ஏற்பட்ட சேதங்களினால் பல பழுதடைந்தும் இருந்தன. இதனால் அப்பொருட்கள் சுகாதார அமைச்சினால் தரநிர்ணயத்திற்கு உட்படுத்தப்பட்டதாகவும் அவை இடம்பெயர்ந்த மக்கள் அனைவருக்கும் வழங்கப் போதுமானதாக இருந்ததெனவும் வவுனியா மாவட்ட அரசாங்க அதிபர் பி.எஸ்.எம்.சார்ள்ஸ் குறிப்பிட்டார்.

வன்னியில் இடம்பெற்ற போர் நடவடிக்கைகளின்போது பாதிக்கப்பட்ட மக்களுக்காக ஐரோப்பாவாழ் தமிழ் மக்களினால் இப்பொருட்கள் சேகரிக்கப்பட்டிருந்தன. குறித்த நிவாரணப் பொருட்கள் அடங்கிய கப்பல் இவ்வருடம் மார்ச் மாதமளவில் இலங்கையை நோக்கிப் புறப்பட்டு மே மாதம் இலங்கையின் கடல் எல்லையை வந்தடைந்தது. அதன் பின்னர் ஏற்பட்ட சில சிக்கல்கள் காரணமாக இலங்கை துறைமுகத்தில் சுமார் மூன்று மாதங்கள் நங்கூரமிடப்பட்டிருந்தது.

இதுதொடர்பாக இலங்கை மற்றும் இந்திய அரசுகளுக்கிடையில் இடம்பெற்ற பேச்சுவார்த்தையின் பின்னர் இந்திய செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக இலங்கை செஞ்சிலுவைச் சங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டன. அதனடிப்படையில் கடந்த ஒக்டோபர் மாதம் 25ஆம் திகதி இப்பொருட்கள் கொழும்பிலிருந்து வவுனியாவிற்கு எடுத்துச்செல்லப்பட்டு தற்போது விநியோகிக்கப்பட்டுள்ளன.

# வாழ்வாதாரத் தகவல்கள்

## மீன்பிடி:

### மீன்பிடிச்சட்டம் - 1996

*மீன்பிடிக்கலங்கள் உற்பத்தி செய்யப்படும்போது, 1996ஆம் வருட திணைக்களச் சுற்று நிருபம் இல. 01 இல் குறிக்கப்பட்ட மீன்பிடி மற்றும் நீரியல் வளங்கள் சட்டம் இல. 02 இன் பிரகாரம் பிரமாணங்கள் கடைப்பிடிக்கப்பட வேண்டும்.*

■ *மீன்பிடிக் கலங்கள் உற்பத்தி செய்யப்படும் வள்ளம் கட்டுமிடங்கள், மீன் பிடி மற்றும் நீரியல் திணைக்களத்தில் (FARD) பதிவு செய்யப்படவேண்டும்*

■ *மீன்பிடிக்கலங்களை உற்பத்தி செய்வதற்கு முன்பதாக வள்ளங்களின் வடிவமைப்பிற்கான அனுமதியை FARD அத்தியட்சகரிடம் பெற்றுக்கொள்ள வேண்டும்*

■ *1980ல் மீன்பிடி வள்ளப்பதிவுச் சட்டப் பிரமாணங்களுக்கு அமைய இந்த வள்ளங்கள் FARD இல் பதிவு செய்யப்பட வேண்டும்.*

■ *விண்ணப்பம் அனுப்பப்படும்போது, மாவட்ட காரியாலய மீன்பிடி உதவி அத்தியட்சகரினால் குறிக்கப்பட்ட அந்த வள்ளத்திற்கான ஒரு பதிவிலக்கம் ஒதுக்கப்படும். அந்த பதிவு இலக்கம் “Fisheries 49 (Amendment)” பத்திரத்தில் பதிவு செய்யப்பட வேண்டும்.*

■ *ஒதுக்கப்பட்ட பதிவு இலக்கத்தையும் மாவட்டத்தின் குறியீட்டு எழுத்துகளையும் அந்த வள்ளத்தில் FARDஇற்கமைய பொறிக்கப்பட வேண்டும்.*

■ *அத்துடன் வள்ளம் கட்டுமிடத்தின் இலக்கமும் வள்ளத்தில் எழுதப்பட வேண்டும்*

■ *ஒவ்வொரு வள்ளத்திற்கான கடலில் ஓட்டத்தகுந்த சான்றிதழினை FARD அத்தியட்சகரிடமிருந்தோ அல்லது அவரால் சிபாரிசு செய்யப்பட்ட உத்தியோகத்தரிடமிருந்தோ பெறப்படவேண்டும்.*

■ *1996இன் மீன்பிடி மற்றும் நீரியல் வளங்கள் சட்டம் இல: 02 இன் தொகுதி 6இல் உள்ள பிரமாணங்களுக்கேற்ப மீன்பிடித்தொழில் அனுமதிப்பத்திரம் FARD அத்தியட்சகரினால் சிபாரிசு செய்யப்பட்ட உத்தியோகத்தரிடமிருந்து பெற்றுக் கொள்ளவேண்டும்.*



■ வைப்பகப் படம் : புத்தளம் மீனவர்கள்

# மண்ணை இழந்த மக்களின் பாடுகள்

## இடம்பெயர்ந்து சாலம்புர கிராமத்தில் வாழும் மக்களின் குரல்கள்

வடக்கைச் சேர்ந்த முஸ்லிம் மக்கள் 1990ஆம் ஆண்டில் பலவந்தமாக வெளியேற்றப்பட்டதையடுத்து அவர்களில் ஒரு பகுதியினர் அநுராதபுர மாவட்டத்திலுள்ள இகிரிகொல்லாவ மற்றும் தல்காவ பகுதிகளில் தஞ்சமடைந்தனர். அகதிகளாக அநுராதபுரத்தில் ஆங்காங்கே குடியேறிய சுமார் மூவாயிரம் குடும்பங்களுக்கு ஒரு தற்காலிக முகவரியை ஏற்படுத்திக்கொடுத்தது சாலம்புர கிராமம்.

அகதிகளுக்கு வழங்கப்பட்ட உதவித் தொகையிலிருந்து ஒவ்வொரு குடும்பத்திடமிருந்தும் 3250 ரூபாவினை வசூலித்து, இகிரிகொல்லாவ பகுதியில் 40 ஏக்கர் நிலப்பரப்பைக் கொள்வனவு செய்து, அதில் அம்மக்கள் குடியேறினர். வடக்கில் தாம் வாழ்ந்த இடமான சாலம்பகுளம் (வவுனியா) எனும் ஊரின் நினைவாக தாம் புதிதாகக் குடியேறிய பகுதிக்கு சாலம்புர கிராமம் என பெயர் வைத்தனர்.

இடம்பெயர்ந்து அகதிகளாக வாழ்ந்து வரும் இம்மக்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் பலதரப்பட்டவை.

*அநுராதபுரத்திலிருந்து நிரஞ்சனி ரோலண்ட்*



மகளைப் பள்ளிக்கு அழைத்துச் செல்லும் சாலம்புர கிராமவாசி ஒருவர்.

### காணிக்கு உரிமைகோர முடியாமை

பணம் கொடுத்து கொள்வனவுசெய்த காணிக்கு உறுதிப்பத்திரம் வழங்கப்படாமையால் இங்கு வாழும் மக்கள் பெரும் அசௌகரியங்களை எதிர்கொண்டு வருவதாக இக்கிராமத்தைச்சேர்ந்த வயோதிபர் மொஹைதீன் பிச்சை தெரிவித்தார். ''நாம் காசு கொடுத்து இந்நிலத்தை வாங்கினோம். எனினும் அதற்கான எந்தவொரு ஆதாரமும் இல்லை. கடிதமொன்றை எழுதி வைத்தே காசைக் கொடுத்தோம். சிலருக்கு ஒரு வருடம் செல்லுபடியாகும் உறுதிப்பத்திரத்தைக் கொடுத்தார்கள். பலருக்கு அதுவும் கிடைக்கவில்லை. காணியை வாங்கி வீடு கட்டப் பணம் இல்லாமல் எவ்வளவோ கஷ்டப்பட்டோம். ஆரம்பத்தில் குடிசைகளை அமைத்து வாழ்ந்தோம். பின்னர் உதவித்தொகைகளைக்கொண்டு கல்வீடு கட்டினோம். இங்கு வந்து குடியேறி 19 வருடங்கள் ஆகின்றன. நாம் கட்டிய வீட்டை சொந்தமெனக் கூறுவதற்கு கையில் உறுதிப்பத்திரமில்லை,'' என தனது ஆதங்கத்தை வெளிப்படுத்தினார்.



சப்ரான் பீபி

'இந்நிலை நீடிக்குமாயின் சாலம்புர கிராமத்தில் பிறந்த தமது பிள்ளைகளின் எதிர்காலம் பாதிக்கப்படும்' என அஞ்சுகின்றார் சப்ரான் பீபி. எமது பிள்ளைகள் இங்கு பிறந்தவர்கள். சாலம்புர கிராமப் பெயரிலேயே பிறப்புச் சான்றிதழ் உள்ளது. எம்மை விடுங்கள், நாம் மீண்டும் சொந்த ஊருக்குப் போய்விடுவோம். ஆனால், பிள்ளைகளுக்கு நாம் அங்கு உரிமைகோர முடியாது. பிறந்த இடத்திலிருந்து பலவந்தமாக வெளியேற்றப்பட்டோம். இவ்வாறு எம்மை அகதி, அகதி என சொல்லிக்கொண்டிருந்தால் நாம் எங்கு செல்வது? பிள்ளைகளுக்குக் காணி உறுதிப்பத்திரம் தேவை. அவர்களுக்கு இந்த ஊர் குடியுரிமை வேண்டும்.

தனிமனித இருப்பை உறுதி செய்யும் ஆவணங்கள் இலங்கையைப் பொறுத்தவரையில் அத்தியாவசியமானவை. தேசிய அடையாள அட்டையும் அதனைப் பெறுவதற்குத் தேவையான பிறப்புச் சான்றிதழும் ஒவ்வொரு பிரஜையினதும் வாழ்வுரிமையோடு நெருங்கிய தொடர்புடையவை. இவை இல்லாமல் இருப்போர் படும் பாடுகள் வார்த்தைகளால் விவரிக்க முடியாதவை.

### பிறப்புச் சான்றிதழ், அடையாள அட்டையைப் பெறுவதில் சிக்கல்

இவற்றைப் பெற்றுக்கொள்வதில் ஏற்பட்டுள்ள சிக்கல் நிலையை சாலம்புர கிராமத்தைச் சேர்ந்த இளைஞரான காதர் மீரா விவரிக்கையில், மொழிப்பிரச்சினை காரணமாக நாம் கூறும் பெயரைப் பிழையாகப் பதிவு செய்கின்றார்கள். ''அக்ரம்'' என்று கொடுத்தால் ''அன்னம்'' என பதிகின்றார்கள். சொல்லப்போனால் தமிழ் பெயரையோ முஸ்லிம் பெயரையோ இவர்களால் முறையாக எழுத முடியாதுள்ளது. சிங்களப் பெயர்போல எழுதுகின்றார்கள். இதுதவிர, தேசிய அடையாள அட்டையைப் பெற்றுக் கொள்வதற்கு கச்சேரிக்குச் சென்றால், இன்றைக்கு வா... நாளைக்கு வா... என கூறுகின்றார்கள். இது பெரும் பிரச்சினையாகவுள்ளது,'' என்றார்.

வடக்கிலிருந்து இடம்பெயர்ந்து வந்த போது தமது பிறப்புச் சான்றிதழ் மற்றும் தேசிய அடையாள அட்டையைத் தவறவிட்ட சில பெரியவர்களும் அதனை மீளப் பெற்றுக்கொள்வதில் சிக்கல்களை எதிர்கொள்வதாகத் தெரிவிக்கப்படுகின்றது. இதனை மீளப் பெற்றுக்கொள்வதற்காக கச்சேரிக்கு விண்ணப்பித்தபோது, அந்த ஆவணங்கள் கச்சேரிகளில் இல்லையெனத் தெரிவிக்கப்பட்டதாக அம்மக்கள் தெரிவித்தனர்.



காதர் மீரா

### இவர்களின் இந்தப் பிரச்சினைகளுக்கான தீர்வு குறித்து அநுராதபுர மாவட்ட உதவி அரசாங்க அதிபர் ஆர்.எம்.பி.ரத்நாயக்கவிடம் வினவியபோது;

'அவர்கள் இகிரிகொல்லாவ பகுதியில் நிரந்தர வதிவிடத்தைக் கொண்டிருக்கவில்லை. அவர்களுக்கான வாக்காளர் உரிமை வவுனியாவிலேயே இருந்தது. அதனால் இங்கு அவர்களுக்குக் காணிகளைப் பெற்றுக்கொடுக்க முடியவில்லை. அவர்கள் இங்கு நிரந்தரமாக வசிப்பதற்கான விருப்பத்தைத் தெரிவிக்கும் பட்சத்தில் காணி ஆணையாளரின் அனுமதியைப்பெற்று அவர்களுக்குக் காணி உரிமைகளைப் பெற்றுக்கொடுப்பதற்கான ஏற்பாடுகளை முன்னெடுக்கலாம். இதேவேளை, இங்கு பிறந்தவர்களுக்கு நாம் இங்கேயே பிறப்புச் சான்றிதழ்களை வழங்கியுள்ளோம். பெரியவர்கள் அவர்கள் வாழ்ந்த மாவட்டங்களில் தேசிய அடையாள அட்டையைப் பெற்றுள்ளனர். இடம்பெயர்ந்த பெரியோர்களுக்கு இங்கு தொடர்ந்து இருப்பதற்கு விருப்பமில்லை. ஆகவே, அவர்களுக்கு எம்மால் அடையாள அட்டை வழங்கமுடியாது. ஆனால், அநுராதபுர மாவட்டத்தில் பிறந்தவர்களுக்கான அடையாள அட்டையை நாம் இங்கு பெற்றுக்கொடுப்போம். இங்குள்ள பலர் விவசாயம் மேற்கொள்ள விரும்பவில்லை சிலரே விவசாயம் செய்கின்றனர். அநேகமானோர் வெளிமாவட்டங்களுக்கு தொழிலுக்காகச் செல்கின்றனர்,'' என்றார்.

### இவர்களின் பிரச்சினைகளுக்கு தீர்வினை பெற்றுக்கொடுப்பதாகக் கூறுகின்றார் தேசத்தைக் கட்டியெழுப்பும் அமைச்சின் செயலாளர்



எஸ்.எம். ரஞ்சித்

இடம்பெயர்ந்த இந்த மக்களை அவர்களின் சொந்த இடங்களுக்கு மீள்குடியேற்றுவதற்கான நடவடிக்கைகளை அரசு மேற்கொண்டு வருகின்றது. இந்த நடவடிக்கையின் போது இவர்களுக்கான பிறப்புச் சான்றிதழோ அடையாள அட்டையோ இல்லை என்பது பெரும் பிரச்சினையாக அமையாது. ஆனால் இங்கு பிறந்த பிள்ளைகள் இவ்வாறான பிரச்சினைகளை எதிர்கொள்வது தொடர்பில் எமக்கு எவரும் முறைப்பாடு செய்யவில்லை. எதிர்காலத்தில் இதுகுறித்துத் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்வோம். அதேபோல் வாவிகள், குளங்களை மீள் நிர்மாணம் செய்து, விவசாயக் காணிகளையும் பெற்றுக்கொடுத்து, வறுமையிலுள்ள குடும்பங்களின் வருமானத்தை அதிகரிப்பதற்கான நடவடிக்கைகளை எடுக்கின்றோம். சுயதொழிலை மேற்கொள்வதற்கான கடன் உதவிகளையும் வழங்கவுள்ளோம் என்றார்.

# 'யாழில் நிலைமைகள் முன்னேற்றம்'

அண்மையில் யாழ்ப்பாணத்துக்குத் தெற்கிலுள்ள ஊடகவியலாளர்களை தேசிய சமாதானப் பேரவை அழைத்துச்சென்றிருந்தது. இந்தப் பயணம் குறித்து அவ்வமைப்பின் தலைவர் கலாநிதி ஜெகான் பெரேரா 'மீண்டும் வாழ்வோம்' இதழுக்கு வழங்கிய செவ்வி.



கலாநிதி ஜெகான் பெரேரா

செவ்வி

ஏ. சொர்ணலிங்கம் INTERVIEW

**■ யாழ்ப்பாணத்திற்கான உங்களது விஜயத்தின் நோக்கம் குறித்துக் கூற முடியுமா?**

வடக்கிற்கும் தெற்கிற்கும் இடையில் தொடர்பாடலில் இடைவெளி காணப்படுகின்றது. போர் முடிவுற்று ஆறு மாதங்களான பின்பும் யாழ்ப்பாணத்திற்குச் செல்வதில் பல பிரச்சினைகள் இருக்கின்றன. உதாரணமாக, யாழ்ப்பாணத்திலிருந்து ஒருவர் நாட்டின் எந்தப்பகுதிக்குச் செல்வதானாலும் அனுமதி பெறவேண்டும். அதேபோல, தெற்கிலிருந்து யாழ்ப்பாணம் செல்வதானால் பாதுகாப்புத் தரப்பின் அனுமதி பெறப்படல் வேண்டும். அல்லது நிறைய பணம் செலவுசெய்து விமானச்சீட்டைப் பெற்றுக்கொள்ள வேண்டும். இவ்வாறான காரணங்களினாலேயே வடக்கில் காணப்படும் உண்மை நிலைவரங்கள் தொடர்பாக தெற்கில் காட்டப்படும் விம்பங்களுக்கிடையில் பெரிய இடைவெளி காணப்படுகின்றது. இதனை நாட்டின் பல பகுதிகளிலும் வாழும் மக்களுக்குத் தெரியப்படுத்தவே ஊடகவியலாளர்களையும் நாம் அங்கு அழைத்துச்சென்றோம்.

**■ இந்த விஜயத்தில் பங்குபற்றிய ஊடகவியலாளர்களை எவ்வாறு தெரிவுசெய்தீர்கள்?**

நாம் இந்த விஜயத்தை சுதந்திர ஊடக இயக்கத்துடன் இணைந்தே மேற்கொண்டோம். ஆதலால், அந்த இயக்கத்துடன் பணிபுரியும் ஊடகவியலாளர்களை நாம் தெரிவுசெய்தோம்.

**■ யாழ்ப்பாணத்தில் நீங்கள் ஏதாவது குறிப்பிட்ட பிரதேசங்களுக்கு விஜயம் செய்தீர்களா? நீங்கள் சென்ற இடங்கள் பற்றிக் கூற முடியுமா?**

நாங்கள் கூடுதலாக யாழ் நகரிலேயே இருந்தோம். அங்கு பல சந்திப்புகளை மேற்கொண்டோம். முக்கியமாக, யாழ்ப்பாணத்திலுள்ள ஊடக அமைப்புகளை சந்தித்தோம். உதயன் பத்திரிகையின் ஊழியர்களையும் நாம் சந்திக்கக்கூடியதாக இருந்தது. இதைவிட, அண்மையில் வேலணையில் மீள்குடியமர்த்தப்பட்ட மக்களையும் நாம் சந்தித்து அவர்களின் குறைநிறைகளை அறியக்கூடியதாக இருந்தது.

**■ யாழ்ப்பாணத்தில் இருக்கும்போது நீங்கள் எல்லா இடங்களுக்கும் செல்லக்கூடியதாக இருந்ததா?**

எங்களுக்கு எல்லா இடங்களுக்கும் செல்லக்கூடியதாக இருந்தது. யாழ்ப்பாணத்தில் உயர்பாதுகாப்பு ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டிருந்தபோதும், நாங்கள் எந்த சோதனைச் சாவடியிலும் நிறுத்தப்படவில்லை. நாங்கள் வேலணைக்குச் செல்வதிலும் எவ்வித சிக்கலும் ஏற்படவில்லை.

எனினும், நாங்கள் நலன்புரி நிலையங்களுக்குச் செல்ல முடியவில்லை. ஏனெனில், நாங்கள் ஒன்றரை நாட்களே அங்கு இருந்தோம். அங்கு செல்வதில் சில சிக்கல்கள் ஏற்பட்டிருக்கும், காரணம், நிவாரணக் கிராமங்களுக்குள் செல்வதற்கு சில அரசசார்பற்ற நிறுவனங்கள் மட்டுமே அரசினால் அனுமதிக்கப்பட்டுள்ளதாக நாம் அறிகிறோம்.

**■ யாழ். விஜயம் தொடர்பில் தெற்கிலுள்ள மக்களுக்கு உங்களது செய்தி என்ன?**

போர் முடிவுற்றாலும் அது யாழ். மக்களின் வாழ்க்கையில் பாரிய மாற்றத்தை ஏற்படுத்தவில்லை. எனினும், அவர்களுக்கு முன்னர் இருந்ததுபோல அச்சுறுத்தல்கள் இல்லை. ஆனால், அவர்கள் சுதந்திரமாக எங்கும் செல்லக்கூடிய நிலைமை உருவாக வேண்டும்.

**■ யாழ்ப்பாணத்தை நீங்கள் எவ்வாறு சென்றடைந்தீர்கள்?**

நாங்கள் விமானம் மூலம் சென்றோம். ஏனெனில், தரைமார்க்கமாக செல்வதற்கு பாதுகாப்புத்தரப்பின் அனுமதி வேண்டும். அதிலும் ஊடகவியலாளர்களுடன் செல்வதால் காலதாமதமாகும் எனக் கருதினோம். விமானத்தில் செல்வதற்கு இலங்கையராக இருந்தால் பாதுகாப்புத்தரப்பின் அனுமதி தேவையில்லை.

**■ நீங்கள் அங்கு மேற்கொண்ட சந்திப்புகள் பற்றி விபரமாகக் கூற முடியுமா?**

ஊடகவியலாளர்கள் சிலரை சந்தித்தோம். அவர்கள் மக்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகளைப்பற்றிக் கூறினார்கள். முக்கியமாக பயணங்களை மேற்கொள்வதிலுள்ள பிரச்சினைகள், சோதனை நடவடிக்கைகள் மற்றும் தெற்கிலிருந்து பண்டங்களைக் கொணர்வதில் உள்ள பிரச்சினைகள், சூழல் மாசடைதல் போன்றவற்றை சுட்டிக்காட்டினர்.

சமூக அமைப்புக்கள் மற்றும் அரசசார்பற்ற அமைப்புக்களின் இணையத்துடனும் சந்திப்பை மேற்கொண்டோம். அவர்கள் மீளக்குடியமர்த்தப்பட்ட மக்களுடன் பணிபுரியாத நிலை இருப்பதாகத் தமது கவலையை வெளிப்படுத்தினர்.

**■ வடக்கைப் போலவே தெற்கிலும் சோதனைச்சாவடிகள் உள்ளன. இந்த இரண்டு பிரதேசங்களிலும் உள்ள சோதனைச்சாவடிகளுக்கிடையில் வேறுபாடுகளை அவதானித்தீர்களா?**

சோதனைச்சாவடிகளில் நிறுத்தப்பட்டு, எங்கிருந்து வருகிறோம், எங்கு செல்கிறோம் என்று கேள்விகள் கேட்கப்படுவதை யாரும் விரும்பமாட்டார்கள். ஆனால், கொழும்பிலும் யாழ்ப்பாணத்திலும் சோதனைச்சாவடிகளிலுள்ள இராணுவத்தினர் மற்றும் பொலிஸார் மிகவும் அனுசரணையாகவே நடந்துகொள்கின்றனர். இது ஒரு நல்ல முன்னேற்றமாகும்.

> “அவர்களுக்கு முன்னர் இருந்ததுபோல அச்சுறுத்தல்கள் இல்லை. ஆனால், அவர்கள் சுதந்திரமாக எங்கும் செல்லக்கூடிய நிலைமை உருவாக வேண்டும்.”

**■ இந்த விஜயத்திற்கு எந்த நாட்டினால் அல்லது நிறுவனத்தினால் நிதியுதவி வழங்கப்பட்டது என்று கூற முடியுமா?**

இந்த குறிப்பிட்ட திட்டம் நெதர்லாந்து தூதரகத்தின் அனுசரணையுடன் மேற்கொள்ளப்பட்டது.

# யாழில் மீள்குடியேற்றப்பட்ட மக்களுக்கு சட்ட ஆவணங்களைப் பெற்றுக்கொடுக்க நடவடிக்கை

*ஆர்த்தி பாக்கியநாதன்*

யாழ்.மாவட்டத்தில் மீள்குடியேற்றப்பட்டுள்ள மக்களுக்கு சட்ட ஆவணங்களைப் பெற்றுக்கொடுக்கும் முயற்சியில் யாழ்.மாவட்ட பதிவாளர் நாயகம் திணைக்களம் ஈடுபட்டுள்ளது.

'வயது வித்தியாசமின்றி அனைவருக்கும் தேவையான சட்ட ஆவணங்கள் பெற்றுக்கொடுக்கப்படுகின்றன' என்று மாவட்ட மேலதிக பதிவாளர் நாயகமும் காணிப்பதிவாளருமான பரஞ்சோதி பிரபாகர் தெரிவித்தார். குறிப்பாக பிறப்புச்சான்றிதழ், இறப்புச்சான்றிதழ் மற்றும் திருமணப் பதிவுப்பத்திரம் ஆகியன வழங்கப்பட்டு வருவதாக அவர் மேலும் தெரிவித்தார்.

இது தொடர்பில் கருத்துத் தெரிவித்த சட்டத்தரணி இரா. சடகோபன் ''சட்ட ஆவணங்கள் என்பன மனிதனது அடையாளத்தை உறுதிப்படுத்துவதற்கு அவசியமானவை என்றால் மிகையாகாது. ஒரு மனிதன் எங்கே, யாருக்குப் பிறந்தான், யாரைத் திருமணம் செய்துள்ளான், எங்கே இறந்தான் போன்றவற்றை உறுதிப்படுத்துவதற்கு மட்டுமல்ல, பிள்ளைகளைப் பாடசாலைக்குச் சேர்ப்பதென்றாலும் சரி, ஏனைய உத்தியோகப்பூர்வ தேவைகளுக்காகவென்றாலும் சரி, சட்ட ஆவணங்கள் என்பன தவிர்க்க முடியாதவையாக இருக்கின்றன,'' என்றார்.

அவர் தொடர்ந்து தெரிவிக்கையில், ''மனிதனது பெயர், பிறந்த திகதி, அடையாளம் என்பவற்றை உறுதிப்படுத்த சட்ட ஆவணங்கள் முக்கிய ஆதாரங்களாகக் காணப்படுகின்றன. இன்னொரு வகையில் பார்ப்போமானால், பாடசாலை மற்றும் ஏனைய நிர்வாகத் தேவைகளுக்கும் இவை மிக அவசியமானவையாக இருக்கின்றன. மேலும், பிறப்பு, இறப்பு போன்றவற்றின் புள்ளி விபரங்களைப் பெற்றுக்கொள்வதற்கும் சட்ட ஆவணங்கள் மிக அவசியமாக இருக்கின்றன.



» 6 ஆம் பக்கம்...

## சிந்தனைக்கு...

இந்த உலகில் வாழ்கின்ற மனிதர்கள் அனைவரும் ஒரே இறைவனின் பிள்ளைகள். நாம் அனைவரும் சகோதரர்கள் என்பதை மறந்துவிடலாகாது. நாம் உடலமைப்பால், இரத்தத்தால், நோயால், அறிவால் ஒன்றுபட்டிருக்கின்றோம். விலங்குகள், பறவைகள்கூட அன்புசெய்து வாழும்போது சாதி, இன பேதமென்று நமக்குள் ஏன் இத்தனை பிளவுகள்? மேன்மையான எண்ணங்களை வளர்த்தால் புதியதொரு உலகம் உருவாகும்! நம்பிக்கை மலர் நாளை நம் வாழ்வில் மணம் பரப்பும்..!

**பாலகிருஷ்ணன் திலகானந்தம்,**
வலயம் 14/105,
இராமநாதன் நலன்புரி நிலையம்,
செட்டிக்குளம், வவுனியா.

## நமக்கான வெளி

**வாசகர்களாகிய உங்களது பங்களிப்புக்களையும் 'மீண்டும் வாழ்வோம்' இதழ் எதிர்பார்க்கிறது. இவ்விதழில் இடம்பெறும் ஆக்கங்கள் பற்றிய உங்கள் கருத்துக்கள், மேம்படுத்தலுக்கான ஆலோசனைகள் மற்றும் கவிதை, கட்டுரை, சிறுகதை முதலான உங்கள் படைப்புக்கள் ஆகியவற்றை நீங்கள் அனுப்பி வைக்கலாம். அனுப்பி வைக்க வேண்டிய முகவரி:**

**ஆசிரியர்**
**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ. இல:1039, கொழும்பு**

## உங்களிடமிருந்து...



உணர்வுகள் உடைக்கப்பட்டு வேதனையால் சிறைபிடிக்கப்பட்ட எம் மனதை, உன் மனிதாபிமான சேவையால் ஆறுதல்படுத்தும் உற்ற உறவாய் மாறி எம்மை மகிழ்வூட்டும் 'மீண்டும் வாழ்வோம்' பத்திரிகையே, உன்னில் உலாவரும் அனைத்து அம்சங்களும் அகதி வாழ்விலிருந்து விடுதலை பெறக் காத்திருக்கும் எமக்கு பெரிதும் பலனளிக்கின்றன.

உனக்கு பலகோடி வந்தனங்கள் கூறுவதுடன், தினமும் உனது வரவை எதிர்பார்க்கின்றோம். தொடர்ந்தும் வா மீண்டும் வாழக் காத்திருக்கும் எமக்கு உற்ற தோழனடா நீ!

**ஆர். பற்றீசியா,**
வலயம் 6,
மெனிக்ஃபாம்.

எனது பெயர் ம.கிருஷ்ணபேபி. தரம் 10இல் கல்வி பயின்று வருகின்றேன். தற்போது இடம்பெயர்ந்து செட்டிக்குளம் இராமநாதன் முகாமில் வசித்து வருகின்றோம். கஸ்டத்தின் மத்தியில் இருக்கும் நாம், வேறு பத்திரிகைகள் வாங்க முடியாத வேளையில் தங்களின் 'மீண்டும் வாழ்வோம்' பத்திரிகை எமக்கு இலவசமாகக் கிடைப்பதையிட்டு மிக்க மகிழ்ச்சியடைகின்றோம். அது மட்டுமன்றி துன்பத்தில் இருக்கும் எம்மை இவ்விதழ் ஓரளவு சந்தோசப்படுத்துகின்றது. இவ்வார இதழில் வந்த விடயங்கள் யாவும் எம்மால் உள்வாங்கக்கூடியதாக இருந்தது. துரிதமாக மீள்குடியமர்வோம் என தங்களின் பிரசுரத்தின் ஊடாக அறியும் ஆவலுடன் இருக்கின்றோம்.

**ம.கிருஷ்ணபேபி,**
வலயம் 10, இல. 641,
இராமநாதன் முகாம்,
வவுனியா.

(5ஆம் பக்கத் தொடர்ச்சி)

## யாழில்...

யாழ். மாவட்டத்தின் அனைத்து பிரதேச செயலகங்களினூடாகவும் கிராம சேவகர்களுக்கு சட்ட ஆவணங்கள் வழங்கப்படும் விடயம் தொடர்பான தகவல்கள் வழங்கப்பட்டு பின்னர், கிராம சேவையாளர்கள் மூலமாக மக்களுக்கு அறிவிக்கப்பட்டுள்ளன. பிறப்புச் சான்றிதழைப் பெற்றுக்கொள்வதற்கு பிறந்த இடமும் பிறந்த திகதியும் இருந்தாலே போதுமானது. எனினும், பிறப்புச் சான்றிதழைப் பெற்றுக்கொள்ள வேண்டிய அவசியமுடைய ஒருவருக்கு குறித்த பிறப்புச் சான்றிதழின் பதிவு இலக்கம் அல்லது பதிவுத் திகதி தெரிந்திருக்குமேயானால் மிக இலகுவில் பெற்றுக்கொள்ள முடியும். அவ்வாறு பதிவு இலக்கமும் அல்லது பதிவுத் திகதியும் தெரிந்திருக்கும் ஒருவர் பிறப்புச் சான்றிதழில் ஒரு பிரதியைப் பெற்றுக்கொள்வதற்கு 25 ரூபா முத்திரை ஒட்டவேண்டும். ஒரு விண்ணப்பத்தில் 75 ரூபா முத்திரை ஒட்டியனுப்புவதன் மூலமாக 3 பிரதிகளைப் பெற்றுக்கொள்ள முடியும்.

இதுவே பதிவு இலக்கமோ பதிவுத் திகதியோ தெரியாமல் இருந்தால் ஒரு பிரதியைப் பெறுவதற்கு மேலதிகமாக 25 ரூபா முத்திரை ஒட்ட வேண்டும். அதாவது ஒரு பிரதியைப் பெற்றுக்கொள்வதற்கு 50 ரூபா முத்திரையும் 3 பிரதிகளைப் பெற்றுக்கொள்வதற்கு 100 ரூபா முத்திரையும் ஒட்டுதல் வேண்டும். தேடுதலுக்காக 25 ரூபா முத்திரை மேலதிகமாக ஒட்டப்படல் வேண்டும்.

மீள்குடியேற்றப் பிரதேசங்களில் வாழும் மக்களுக்கு முக்கியமான சட்ட ஆவணங்களான பிறப்புச் சான்றிதழ், இறப்புச் சான்றிதழ், திருமணப் பதிவுப்பத்திரம் மற்றும் தேசிய அடையாள அட்டை என்பவற்றைப் பெற்றுக்கொடுப்பதற்கான நடமாடும் சேவைகளும் நடத்தப்பட்டு வருகின்றமை குறிப்பிடத்தக்க விடயமாகும்.

## உங்கள் கதைகள்

**'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சியில் உங்கள் கதைகள் குறுநாடக வடிவில் இடம்பெற்று வருகின்றன. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒலிபரப்பாகும் நாடகங்களின் தொகுப்பை இப்பத்திரிகை வாயிலாகவும் உங்களுக்கு தருகிறோம். கடந்தவாரம் இடம்பெற்ற 'கல்வியைக் களையாதீர்' நாடகத்தின் சுருக்கம் இதோ:**

# கல்வியைக் களையாதீர்

*லோஷினி*



இடம்பெயர்ந்த நிலையில் வாழும் மக்கள் மத்தியில் அவர்களது பிள்ளைகளின் பாடசாலைக் கல்வி தொடர்பாக அக்கறையற்ற தன்மை காணப்படுவதாக தகவல்கள் தெரிவிக்கின்றன.

இடம்பெயர்ந்து வாழும் மாணவர்களுக்கு அரசும் அரசசார்பற்ற நிறுவனங்களும் பல உதவிகளை வழங்கி வருகின்றபோதிலும் சில பெற்றோர் மத்தியில் காணப்படும் அக்கறையற்ற தன்மையால் பிள்ளைகளின் எதிர்காலம் பாதிக்கப்படக்கூடும். இந்த விடயத்தைக் கருப்பொருளாகக் கொண்டுள்ளது 'கல்வியைக் களையாதீர்' குறுநாடகம்.

ராசன், வசந்தி தம்பதியினருக்கு இரண்டு பிள்ளைகள். இருவரும் பாடசாலைக்குச் செல்கின்றார்கள். தமக்கு என்ன பிரச்சினை வந்தாலும் பிள்ளைகளின் பாடசாலைக் கல்வி விடயத்தில் அக்கறையுடன் இருக்கிறார்கள். ராசனும் மனைவியும் தமது பிள்ளைகளின் எதிர்காலம் தொடர்பாக எப்போதும் பேசிக்கொள்வார்கள். கல்வியறிவு போதியளவு இல்லாததால் தாம் எதிர்கொள்ளும் பிரச்சினைகளுக்குத் தமது பிள்ளைகள் எதிர்காலத்தில் முகங்கொடுக்கக்கூடாது என்ற விடயத்தில் மிகவும் கவனமாக இருக்கின்றார்கள்.

'இனிவரும் காலத்தில் கல்வி அறிவில்லாதவனை மனிதனாக மதிக்கவே மாட்டார்கள்,' என்று ராசன் தனது மனைவியிடம் அடிக்கடி கூறிக்கொள்வார். இடம்பெயர்ந்த நிலையில் வாழும் இவர்கள், தமக்கு வழங்கப்படும் உதவியைக்கொண்டு பிள்ளைகள் இருவரையும் பாடசாலைக்கு அனுப்புகின்றார்கள்.

இவர்களின் அயலில் இருக்கும் தேவி தனது மகள் கிருபாவின் கல்வி விடயத்தில் அக்கறை இல்லாமல் இருக்கிறாள். கிருபாவிற்கு பாடசாலை செல்ல விருப்பம் இருந்தும் தாயின் அக்கறையின்மையால் ஒழுங்காக பாடசாலை செல்வதில்லை. கிருபாவிற்கு பாடசாலை செல்வதற்கான வேலைகளைச் செய்துகொடுக்க தேவி கவனம் எடுப்பதில்லை. இதனால் படிக்க ஆர்வமுள்ள கிருபாவின் பாடசாலை நாட்கள் வீணடிக்கப்படுகின்றன.

வழமைபோல அன்றும் கிருபாவின் பாடசாலை சீருடையைத் துவைக்காமல்விட்டதால் கிருபா பாடசாலைக்குச் செல்லவில்லை. அன்று கிருபாவிற்கு பரீட்சை இருந்தது. பாடசாலையில் ஆசிரியர் தண்டிப்பார் என்று கிருபா கூற, காய்ச்சல் என்று பொய் சொல்லுமாறு தேவி கூறுகிறாள். ஒரு நாளைக்கு பள்ளிக்கூடம் போகாவிட்டால் பெரிதாக ஒன்றும் குறையாது என்று அசட்டுத்தனமாக மகளுக்குக் கூறுகிறாள். கிருபா மறுத்துப் பேச முடியாமல் தலையசைத்துவிட்டுப் போகிறாள். அந்த நேரத்தில் அங்கு வரும் வசந்தி ஏன் பாடசாலை போகவில்லை என்று கிருபாவிடம் கேட்க கிருபா தாய் சீருடை துவைக்கவில்லை என்று கூற, தேவி மகளைக் கண்டிக்கிறாள்.

வசந்தி தேவிக்கு கல்வியின் கட்டாயம்பற்றித் தெளிவாகக் கூறுகிறாள். பெற்றோரின் அக்கறையின்மையால் பிள்ளைகளின் எதிர்காலம் பாதிக்கும் நிலை ஏற்படக்கூடாது என்று அறிவுரை கூறுகிறாள். தேவி தனது பிழையை மறைக்கும் வகையில் சமாளித்துப் பேசுகிறாள். வசந்தி கிருபாவை ஒழுங்காக பாடசாலைக்கு அனுப்புமாறு வற்புறுத்துகிறாள். வீட்டிற்கு வந்து ராசனிடம் தேவியின் அக்கறையற்ற தன்மை பற்றிக் கூறி கவலைப்படுகிறாள். கிருபாவின் எதிர்காலம் குறித்தும் கவலைப்படுகிறாள்.

இந்த விடயம் தொடர்பாக வசந்தியும் ராசனும் வருத்தப்படுகிறார்கள்.

இவ்வாறாக, பிள்ளைகளின் கல்வி விடயத்தில் அக்கறையில்லாத பெற்றோர்கள் சிந்திக்க வேண்டிய கட்டாயத்தை உணர்த்த விழைகிறது 'கல்வியைக் களையாதீர்' குறுநாடகம்.

## நேர அதிகரிப்புடன் 'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சி

**'மீண்டும் வாழ்வோம்'' வானொலி நிகழ்ச்சி நவம்பர் மாதம் தொடக்கம் புதிய பல அம்சங்களுடன் இலங்கை ஒலிபரப்புக்கூட்டுத்தாபனத்தின் தேசிய சேவையில் திங்கள் முதல் வெள்ளிவரை இரவு 9.30 முதல்10.00மணி வரையும் கிழக்கு மாகாணத்தில் பிறை எப்.எம். வானொலியில் ஞாயிற்றுக் கிழமைகளில் பிற்பகல் 1.30 மணி முதல் 2.00 மணிவரையும் ஒலிபரப்பாகவுள்ளது. எமது நிகழ்ச்சி ஒலிப்பதிவுகளையும் இப்பத்திரிகையையும் http://lifeline.internews.lk/ என்ற இணையத்தளத்தில் தரவிறக்கம் செய்யலாம்.**



எமது நிகழ்ச்சிகள் குறித்த உங்களது கருத்துக்களை எழுதியனுப்புங்கள்.

# பூந்தளிர்

எஸ்.பேல்லா டலிமா

**குறள் 2** கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

**விளக்கம்:** தூய அறிவு வடிவான இறைவனின் நன்மை தரும் திருவடிகளைத் தொழாதவர் என்றால், அவர் கற்றதனால் உண்டான பயன் யாதுமில்லை.

## செய்து பாருங்கள்

இம்முறை நாம் உங்களுக்கு வாத்து ஒன்றை செய்வதுபற்றி சொல்லித் தருகிறோம்




*சின்ன சின்ன எறும்பே*
*சிங்கார சிற்றெறும்பே !*

*உன்னைப் போல் நானுமே*
*உழைத்திடவே வேணுமே !*

*ஒன்றன் பின்னே ஒன்றாய்*
*ஊர்ந்து போவீர் நன்றாய் !*

*நன்றாய் உம்மைக் கண்டே*
*நடந்தால் நன்மை உண்டே !*

## எ... று... ம்... பு...

## உங்கள் ஆக்கங்கள்

ம.கிருஷ்ணபேபி,
தரம் 10



ம.கிருஷ்ணரூபி,
தரம் 8



**அன்பான தம்பி, தங்கைகளே...** இராமநாதன் முகாமில் வசிக்கும் **ம.கிருஷ்ணரூபி, ம.கிருஷ்ணபேபி** சகோதரிகள் ''தமது விருப்பமான பாடம் சித்திரம்'' எனும் குறிப்போடு அருகிலிருக்கும் ஓவியத்தை எமக்கு வரைந்தனுப்பியுள்ளார்கள். நீங்களும் ஓவியம், கட்டுரை, கவிதை முதலான உங்களது படைப்புக்களை பிரசுரத்துக்காக அனுப்பி வைக்கலாம்.

அனுப்ப வேண்டிய முகவரி:
பூந்தளிர், 'மீண்டும் வாழ்வோம்',
த.பெ. இல: 1039, கொழும்பு.

# நாவடக்கம் தேவை

ஒரு குருவிடம் சில சீடர்கள் கல்வி கற்று வந்தார்கள். அவர்களில் ஒருவன் போக்கிரி சிறுவன். மிகவும் சுட்டித்தனமானவன், எதைச்சொன்னாலும் அதற்கு உடனே எதிர்வாதம் செய்வான், எல்லோரையும் தனது நாவினால் வேதனைப்படவைப்பான் இதனால் இவனைக் கண்டவர்கள் ஒதுங்கத் தொடங்கினார்கள். ''என்னைக் கண்டு அனைவரும் பயப்படுகிறார்கள்,'' என்று போக்கிரி சிறுவன் சந்தோஷப்பட்டான்.



இவனது செயல்களை மேலுலகத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தார் எமன். இவனைக் கொண்டுபோக நாள் குறித்தார். இதனைக் குரு அறிந்து வேதனைப்பட்டார். அந்த சிறுவன்மேல் பரிதாபப்பட்டு அவனைக் காப்பாற்ற எண்ணினார். எனவே, அந்த நாள் வந்த போது, மடத்திலிருந்த எல்லா சீடர்களுக்கும் ஒரே மாதிரியான ஆடைகளை அணிவித்து போக்கிரிச் சிறுவனை நடுவில்விட்டு உறங்கச்செய்தார்.

அவனைக் கொண்டுபோக வந்த எமதர்மன், எல்லோரும் ஒரே மாதிரி இருக்கக்கண்டு வியப்படைந்தார். சிறிது யோசித்தபின், ''சீடர்களே! நீங்கள் அனைவரும் ஒரே மாதிரியாக இருந்தாலும் உங்களில் ஒருவன் மட்டும் சற்று வித்தியாசமாக இருக்கிறான்,'' என்று கூறி முடிக்கும் முன்பு, போக்கிரிச் சிறுவன் எழுந்து, ''அப்படி என்ன வித்தியாசத்தை என்னில் கண்டீர்கள்,'' என்றான்.

''உன் நாவே உன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டது வா, என்னுடன்,'' என்று அழைத்துச் சென்றார் எமதர்மன்.

**இவ்விரண்டு படத்திலுமுள்ள 7 வித்தியாசங்களைக் கண்டுபிடியுங்கள்**



**வித்தியாசங்கள்**

1. அப்பிள்
2. அப்பிளின் நிறம்
3. கையிலுள்ள படம்
4. வாய்
5. உடையின் நிறம்
6. வால்
7. பூ

## சிந்தனைக்குச் சான்றோர் கூற்று

- அமைதியின் பலன் பிரார்த்தனை, பிரார்த்தனையின் பலன் நம்பிக்கை, நம்பிக்கையின் பலன் அன்பு, அன்பின் பலன் சேவை, சேவையின் பலன் அமைதி **அன்னை தெரசா**
- வெற்றியின் இரகசியம் நோக்கத்தைக் கைவிடாமல் இருப்பது **பெஞ்சமின் டிஸ்ரலி**
- வருந்தி உபசரிக்காதவர்கள் வீட்டில் உண்ணாதது கோடிப் பெருமை **ஔவையார்**
- உனக்குத் தேவையான எல்லா வலிமையும் உதவியும் உனக்குள்ளேயே உள்ளன **விவேகானந்தர்**
- மனிதனின் குற்றங்களில் பெரும்பாலானவை அவனது நாவிலிருந்து தான் பிறக்கின்றன **நபிகள் நாயகம்**



# கண்ணிவெடி கவனம்
## MIND THE MINES


unicef




### கண்ணிவெடிகள் குறித்து விழிப்புடன் இருங்கள்

இடம்பெயர்ந்த மக்களின் மீள் குடியேற்ற நடவடிக்கைகளுக்கு மிதி வெடிகள் மிகப்பெரும் சவாலாக விளங்குகின்றன.

இலங்கையின் யுத்தம் நடைபெற்ற பகுதிகளில் சுமார் 1.5 மில்லியன் மிதிவெடிகளும்,வெடிக்காத பொருட்களும் சுமார் 40 சதுர கிலோ மீற்றர் பரப்பளவில் பரவிக் காணப்படுவதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.

அரசாங்கமும் ஐக்கிய நாடுகள் சபையும் மிதி வெடி அகற்றும் நடவடிக்கைகளில் பல்வேறு அமைப்புகளின் உதவியுடன் முனைப்புடன் ஈடுபட்டுள்ளன. **மீள்குடியேற்ற நடவடிக்கைகளுக்கு தெரிவு செய்யப்பட்ட பகுதிகளில் சுமார் 70 வீதமான மிதிவெடிகள் அகற்றப்பட்டுள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.**

எனினும் மீள்குடியேறும் மக்கள் மிதி வெடிகள் மற்றும் வெடிக்காத பொருட்கள் குறித்து அவதானத்துடன் இருக்க வேண்டும் என்று அனைத்து தரப்பினரும் அறிவுறுத்தி வருகின்றனர்.

'மீண்டும் வாழ்வோம்' நிகழ்ச்சித் திட்டமானது அரசாங்கம் மற்றும் ஐக்கிய நாடுகள் சபையின் சிறுவர் பாதுகாப்பு பிரிவுடன் இணைந்து கண்ணிவெடி கவனம் என்ற விழிப்புணர்வு பகுதியை மீள் குடியேறும் மக்களின் நலன் கருதி வழங்குகின்றது.

மீள் குடியேறும் மக்களின் பாதுகாப்பை உறுதிப்படுத்தும் நோக்கில் இந்த பகுதி இடம்பெறுகின்றது.இதில் உள்ளடக்கப்படும் விடயங்கள் உங்கள் பாதுகாப்பை நோக்காக கொண்டவை. எனவே விழிப்போடு இருப்போம், வருமுன் காப்போம்.

இந்த பரப்புரைத் திட்டம் உங்களிடம் இருந்தும் கருத்துகளை எதிர் பார்க்கின்றது. கண்ணிவெடிகள் தொடர்பான விழிப்புணர்வு திட்டம் எவ்வாறு உங்கள் வாழ்வில் மாற்றங்களை ஏற்படுத்தியது என்பது குறித்து எங்களுக்கு எழுதி அனுப்புங்கள்.

**ஆசிரியர்**
**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ. இல:1039, கொழும்பு**

### ஆபத்தான பிரதேசம் அங்கே போகாதீர்கள்!




யுத்தம் இடம்பெற்ற பிரதேசங்களில் இன்னும் பல இடங்கள் அடையாளப்படுத்தப்படாமலும் மிதிவெடி அகற்றப்படாத நிலையிலும் இருப்பதை நீங்கள் அறிவீர்கள். எனவே சொந்த இடங்களுக்குச் செல்லும் நீங்கள் பின்வருவனவற்றைக் கருத்திற்கொண்டு செயற்படுதல் நலம்.

**சந்தேகத்திற்கிடமான பொருட்களைக் கண்டால் பின்வரும் நிறுவனம் ஒன்றிற்கு அறிவிப்போம்.**

| | |
|---|---|
| DMAO | - 024 2224214 |
| FSD | - 024 4589059 |
| HORIZON | - 024 2224219 |

**அருகிலுள்ள இராணுவ பொறுப்பாளர்**

| | |
|---|---|
| JCCP | - 024 2224301 |
| CTF Mannar | - 023 2232501 |
| CTF Vavuniya | - 024 2221127 |
| CTF Anurathapura | - 025 2264525 |
| SARVATRA | - 024 2224209 |

- ஆபத்தான, சந்தேகத்திற்கிடமான இடங்களுக்குச் செல்லாதிருப்போம்.
- அடையாளப்படுத்திய இடங்களுக்குச் செல்லாதிருப்போம்.
- மிதிவெடி அடையாளக் குறியீடுகளை அகற்றுதல் அல்லது வேறு இடங்களுக்கு மாற்றுதல் போன்ற நடவடிக்கைகளை செய்யாதிருப்போம்.
- மிதிவெடி அகற்றுவோருக்கு இடையூறு செய்யாதிருப்போம்.

## கண்ணிவெடிகளின் உருவத்தோற்றம்



**ஐக்கிய நாடுகளின் சிறுவர்களுக்கான நிதியத்தில் கண்ணிவெடி அபாயக் கல்வியின் திட்ட உதவியாளராக கடமையாற்றும் மிஹிலார் மொஹமட் கண்ணிவெடிகள் எவ்வாறு தோற்றமளிக்கும் என்பது குறித்து தெரிவிக்கின்றார்.**

பொதுவாக கண்ணிவெடிகள் எப்போதும் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் அல்லது உருமாற்றப்பட்ட நிலையில் அதனுடைய சூழலுக்கு அமைவாகக் காணப்படும். அதிகமான சந்தர்ப்பங்களில் நிலத்திற்கு அடியில் புதைக்கப்பட்டிருக்கலாம். இவை மரம், பிளாஸ்ரிக், இரும்பாலான பொருட்கள் ஆகியவற்றினால் உருவாக்கப்பட்டிருக்கலாம். பல நிறங்களிலும் இவை காணப்படுகின்றன. பச்சை, கறுப்பு, மண் நிறம், ஒலிவு நிறம் ஆகியவற்றினால் உருவாக்கப்பட்டிருக்கும். உருளை, செவ்வகம், வட்டம், சதுரம் போன்ற வடிவங்களாலும் இவை ஆக்கப்பட்டிருக்கும்.





### மிதிவெடிகள் மிகக்கவனம்!!

*சிட்டுகளாய் எக்களித்துத் துள்ளிவிளை யாடும்*
*செல்வங்களே!! சொல்லுகின்ற செய்தியொன்று கேளும்!!*

*அயல்தனிலே விளையாடப் போகின்ற வேளை*
*அவதான மாய்நீங்கள் இருந்திடவே வேணும்!!*

*பெருந்தீங்கு விளைவிக்கும் வெடிபொருட்கள் அங்கே*
*இருந்திட்டால் வேண்டாத வினைவந்து சேரும்!!*

*பற்றைகளில், புதர்க்காட்டில், சுற்றியுள்ள வெளியில்*
*மிதிவெடிகள் இருந்திடலாம் மிகக்கவனம் வேணும்!!*

*தெரியாத பொருளேதும் நீர்காண நேர்ந்தால்*
*பெரியவரை வரவழைத்துத் தகவல்சொல்லல் வேணும்!*

*ஆசிரியர், படைவீரர், கண்ணிவெடி தன்னை*
*அகற்றுகின்ற நிபுணர்கள் இவர்களுக்குச் சொல்வீர்!!*

*அறியாமல் தொட்டாலோ வெடித்திடவும் கூடும்!!*
*ஆயுளெல்லாம் அல்லல்பட்டு அவதியுற நேரும்!!*